Licensed to Post Without Pre-Payment Licence No 6T N MS CPP 55

Progressive Tamil Daily to the People

Regd No. TN MS [C] 244 Phone 420212 4 பக்கம் விலை 70 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 12 சென்னை செவ்வாய் 8-12-87 வெளியூர் புதன் 9-12-87 இதழ் 52

# சென்னையை நோக்கி புயல்

## மேலும் மழை நீடிக்கும்

**சென்னை, டிச. 8- வங்கக்கடலில் மையங்கொண்டிருந்த புயல் சின்னம் தற்போது சென்னை அருகே கடற்கரையை நெருங்கிய நிலையில் இருக்கிறது புயலால் பாதிப்பு ஏற்படாமல் இருக்க தமிழகஅரசு தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது.**

கடந்த 2 நாட்களுக்கு மூன்பு வங்கக் கடலில் உருவான குறைந்த காற்றழுத்த மண்டலம் (புயல்சின்னம்) காரைக்கால்அருகே கரையை கடந்தது தெரிந்ததே.

தமிழக கடற் பகுதியில் மையங் கொண்டு பின்னர் அது வலுவிழந்து விட்டது.

இந்த குறைந்தகாற்றழுத்த மண்டலத்தைத் தொடர்ந்து சென்னை புறநகர் பகுதி மற்றும் கடற்கரைமாவட்டங்களில் பலத்த மழை பெய்தது

இந்த மழை பெய்து சற்று ஓய்ந்த நிலையில் மீண்டும் குறைந்த காற்றழுத்த மண்டலம் வங்கக்கடலில் உருவாகியுள்ளது.

சென்னைக்கு தென் கிழக்கே வங்கக் கடலில் உருவாகிய இந்த புயல் சின்னத்தால் சென்னை மற்றும் கடற்கரை பகுதிகளில் நல்ல மழை பெய்யத் தொடங்கியுள்ளது.

இன்று நடுப்பகல் சுமார் 12 மணி அளவில் இந்த புயல் சின்னம் சென்னைக்கு அருகே கடற்கரையை யொட்டி மையம் கொண்டிருந்தது. கடற்கரையையொட்டி அது நகரக்கூடும் என்று சென்னை வானிலைஆராய்ச்சிநிலையம் தெரிவித்தது. இதனால் வரும் 24 மணி நேரத்துக்கு தமிழகத்தின் கடற்கரைப்பகுதிகள் மற்றும் பல்வேறு மாவட்டங்களிலும் பலத்த மழை விட்டு விட்டு பெய்யும் என்றும் வானிலை ஆராய்ச்சி நிலையம்தெரிவித்தது.

புயல் சின்னம் கடற்கரையை யொட்டி நெருங்கியிருப்பதைத் தொடர்ந்து தமிழக அரசு தீவிர பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது,

சென்னை துறைமுகத்திலும் உஷார் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன,

புயல் பாதிப்புஏற்பட்டால் நிவாரணப் பணிகள் மேற்கொள்ள மாவட்ட ஆட்சித் தலைவர்கள் மற்றும் காவல் துறையினர் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மேற்கொள்ள கேட்டுக் கொள்ளப் பட்டுள்ளனர்.

குறைந்த காற்றழுத்த மண்டலம் உருவாகியிருப்பதைத் தொடர்ந்து கடலில் பயங்கர அலைகள்எழுந்துள்ளன. மீனவர்கள் யாரும் படகுகளில் கடலுக்குமீன்பிடிக்கச்செல்ல வேண்டாம் என்றும் கேட்டுக் கொள்ளப் பட்டுள்ளார்கள்.

### ஏரி பகுதிகளில் நல்ல மழை

சென்னைக்கு குடிநீர் வழங்கும் ஏரிபகுதிகளில்நல்ல மழை பெய்து வருகிறது. இன்று பகல் 12 மணி வரை ரெட்ஹில்ஸில் 38 மில்லி மீட்டர் மழை பெய்துள்ளது இந்த ஏரியின் நீர்மட்டம் 31 அடியாகஉள்ளது சோழவரம் ஏரியில் 51 மில்லிமீட்டரும், பூண்டியில் 17 மில்லி மீட்டரும், தாமரைபாக்கத்தில் 56 மில்லி மீட்டரும் மழை பெய்துள்ளது. இந்த நான்கு ஏரிகளிலும் 6483 மில்லியன் கன அடி தண்ணீர் இருக்க வேண்டும் ஆனால் நான்கு ஏரிகளிலும் சேர்ந்து தற்போது 1150 மில்லியன் கன அடி தண்ணீர் உள்ளது.

சோழவரம் ஏரியின் கொள்ளளவு 54.5 அடி ஏரியில் இப்போது 51.8 அடி தண்ணீர் உள்ளது. பூண்டி ஏரியின் கொள்ளவு 138அடிஇப்போது 126-7 அடிநீர் உள்ளது, இந்த ஏரிகளுக்கு விநாடிக்கு 294 கன அடி தண்ணீர்வந்து கொண்டிருக்கிறது. இந்தப் பகுதிகளில் மேலும் மழை பெய்து வருவதால் நீர் மட்டம் மேலும் உயருமெனஎதிர பார்க்கிறோம்.

இவ்வாறுசென்னை குடிநீர் வாரிய தலைவர் ஜேப்பியார் தெரிவித்துள்ளார்.

சென்னையில் பலத்தமழை பெய்துவருவதை தொடர்ந்து பாதுகாப்பு நடவடிக்கைகளை சென்னைமாநகராட்சி எடுத்துள்ளது.

இதுகுறித்து தனி அதிகாரி சந்திரகூடன், ஆணையர் சாந்தஷீலாநாயர் ஆகியோர் மாநகராட்சி அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினர்.

### சுவர்இடிந்து சாவு

தமிழகத்தில் கடந்த சில தினங்களாக பெய்துவரும் பெரும் மழைக்கு இதுவரை 16 பேர் பலியாகிஉள்ளனா திருச்சி மாவட்டம் சுண்ணாம்புக்காரன் பட்டி என்ற கிராமத்தில் மழை காரணமாக ஒரு வீட்டின் சுவர் இடிந்து விழுந்தததல் 4 பேர் இறந்துள்ளனர் இந்த சம்பவத்தில் மேலும் இருவர் பலத்த காய முற்றனர். இன்னொருஇடத்தில் நடந்த சம்பவத்தில் ஒருவர் இறந்துள்ளார்,

### அரசு நிதி உதவி

திருச்சி மாவட்டத்தில் மழை காரணமாக சுவர் இடிந்து விழுந்து உயிர் இழந்த 5 பேர் குடும்பத்திற்கும் தலா இரண்டாயிரம் ரூபாய்க்கான காசோலையை மாவட்ட ஆட்சித்தலைவர் உஜாகர்சிங் வழங்கினார்.

புதுக்கோட்டை மாவட்டம் கந்தர்வ கோட்டையில் சுவர் இடிந்து விழுந்ததில் பள்ளி ஆசிரியை இறந்துள்ளார்.

பல்வேறு மாவட்டங்களிலும் மழை காரணமாக உயிரிழந்தோர் எண்ணிக்கை பதினாறாக உயர்ந்துள்ளது பாதிக்கப்பட்டவர்களின் குடும்பங்களுக்குதேவையான நிதி உதவியும் அளிக்கப்பட்டு வருகிறது.

### பஸ் - ரயில்கள் தாமதம்

தமிழ்நாட்டில் பலத்த மழை பெய்ததின் காரணமாக சென்னை எழும்பூர் வரவேண்டிய அனைத்துரயில்களும் தாமதமாக வந்து சேர்ந்தன.

அதே போல் திருவள்ளுவர் விரைவு பேருந்துகளும் வெளியூர்களிலிருந்து தாமதமாக வந்து சேர்ந்தன,

### போதைப்பொருள் கடத்தல்: வாலிபர் கைது

சென்னை, டிச. 8 ரூபாய் 30 லட்சம் மதிப்புள்ளபோதைப் பொருளை [ஹிராயின்] கடத்திய வாலிபர் ஒருவர் கைது செய்யப்பட்டார்.

இதுபற்றிய விவரம் வருமாறு:.

மாநில குற்றப்பிரிவு ஐ. ஜி. ராஜசேகரன் நாயர் உத்தரவின்பேரில் போதைத் தடுப்பு இன்ஸ்பெக்டர் லட்சுமி நாதன் சென்னை நகரில் தீவிரவேட்டை ஆடினார்.

அப்போதுகோடம்பாக்கம் ராம் தியேட்டர் அருகே கையில் சூட்கேசுடன் வாலிபர் ஒருவர் நின்று கொண்டிருந்தார் போலீசார் அவரை கைது செய்து சோதனையிட்ட போது ரூபாய் 30லட்சம் மதிபபுள்ள ஹிராயின் என்ற போதைப் பொருளை வைத்திருந்தார்.

போலீசார் அவரை விசாரித்தபோது போதைப் பொருளை பம்பாயிலிருந்து ரயில்மூலம் ஒருவர் கொண்டு வந்து கொடுத்ததாகவும் அதை பிரான்ஸ் நாட்டிற்கு கடத்துவதற்காக சென்று கொண்டிருந்ததாகவும் சேதுராமன் கூறினார்.

சேதுராமன் மீது வழக்கு பதிவு செய்து போலீசார் மேலும் விசாரணை செய்து வருகின்றனர்.



கொடி நாளையொட்டி முதல்வர் புரட்சித்தலைவர் ரூபாய் 10 ஆயிரம் நன்கொடை அளித்து கொடி நாள் வசூலைத் துவக்கிவைத்தார்.

# அமெரிக்காவில் கோர்பசேவ்

வாஷிங்டன்; டிச. 8- சோவியத்ரஷ்ய தலைவர் மிகாயில் கோர்பசேவ், அமெரிக்கா போய்ச் சேர்ந்தார்.

அணுஆயுத ஒழிப்பு பற்றிய உடன்படிக்கையில் அமெரிக்காவும் சோவியத்யூனியனும் கையெழுத்திட இருக்கின்றன

ஒன்றை ஒன்று பகைத்து கொண்டிருக்கும் நாடுகள் என்று கருதப்படுபவை ரஷ்யாவும் அமெரிக்காவும் ஆகும்

இந்த பகைமாறிவரலாற்று சிறப்பு மிக்க மாற்றம் உருவாகிறது.

மனித குலமே மகிழ்ச்சி அடையத்தக்க வகையில் மிகக் கொடிய அணு ஆயுதங்களை ஒழிக்க இரு நாடுகளும் திட்டமிட்டுள்ளன.

அதற்கான உடன்படிக்கையில் கையெழுத்திட நேற்று (இந்திய நேரப்படி இன்று அதிகாலை) ரஷ்யத்தலைவர் கோர்பசேவ் வாஷிங்டன் போய்ச்சேர்ந்தார்.

அப்போது நியூயார்க்கில் இரவு நேரம், மழை ஏதுப் இல்லை என்றாலும் ''ஜில்'' என்ற குளிர் இருந்தது.

விமான நிலையத்தில் உயர் அதிகாரிகள் அமைச்சர்கள் கூடியிருந்தனர் அப்போது விமான நிலையத்தில் நடந்த வரவேற்பு நிகழ்ச்சியில் கோர்பசேவ் ரஷ்யா மொழியில் பேசினார்

''ரஷ்யாவும் அமெரிக்காவும் நட்புறவுடன்வாழவேண்டும் என்பதே என் விருப்பம் ஆக்கப்பூர்வமான பேச்சு நடத்த இருக்கிறோம்.

எல்லா அமெரிக்கர்களும் அமைதியுடனும் நலமுடனும் வாழ வாழ்த்துகிறேன் என்று கோர்பசேவ் கூறினார்.

அணு ஆயுத கட்டுப்பாடு ஒப்பந்தத்தில் வாஷிங்டனில் ரீகனும் கோர்பசேவும் கையெழுத்திடுகிறார்கள், நீண்டதூர ஏவுகணைகளை கட்டுப் படுத்துவது குறித்து ரீகனுக்கும் கோர்பசேவுக்கும் அடுத்த [1988ம்] ஆண்டில் மாஸ்கோவில் உடன்படிக்கை கையெழுத்தாகும்.

கோர்பசேவுடன் அவரது துணைவியார் ரெய்சாவும் வந்திருந்தார். அவர் 'பர்கோட்' அணிந்திருந்தார்.

விமான நிலையத்தில் அவர்களை அமெரிக்க வெளி விவகார அமைச்சர் ஜார்ஜ் ஷல்ட்ஸ் வரவேற்றார்.

'கடவுள் நமக்கு உதவட்டும்' என்றும் கோர்பசேவ் குறிப்பிட்டார்.

# நாவலர் தலைமையில் தென் மாவட்ட கலெக்டர்கள் கூட்டம்

மதுரை, டிச. 8- நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தலைமையில் வரும் 15-ந்தேதி தென் மாவட்ட ஆட்சித்தலைவர்கள் கூட்டம் மதுரையில் நடைபெறுகிறது,

இதுபற்றி மதுரைமாவட்ட ஆட்சித் தலைவர் நிருபர்களிடம் கூறியதாவது:-

வரும் 15-ந்தேதி மதுரை நகரில் தென் மண்டலங்களைச்சேர்ந்த ஆட்சித் தலைவர்கள் கூட்டம் நடைபெறுகிறது. நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தலைமையில் நடைபெறும் இந்தக் கூட்டத்தில் 11 மாவட்ட ஆட்சித்தலைவர்கள் பங்கேற்கின்றனர்.

திருச்சி, புதுக்கோட்டை, தஞ்சாவூர், அண்ணா, மதுரை பசும்பொன் முத்து ராமலிங்கம், ராமநாதபுரம், காமராசர், திருநெல்வேலி கட்டபொம்மன், சிதம்பரனார், கன்னியாகுமாரி. ஆகிய மாவட்டங்களின் ஆட்சித் தலைவர்கள் இந்தக்கூட்டத்தில் பங்கேற்கின்றனர்.

மழை விவசாயம் குடிநீர் சிறுசேமிப்பு பற்றி இந்தக் கூட்டத்தில் ஆய்வு செய்யப் படுகிறது இந்தக்கூட்டம் மாநகராட்சி அண்ணா மாளிகையில் நடைபெறுகிறது,

இவ்வாறு கலெக்டர் தேவராஜ் கூறினார், மேலும் அவர் கூறியதாவது:-

மதுரை மாவட்டத்தில் பரவலாக நல்லமழை பெய்துள்ளது. பாசன வேலைகள் நடைபெற்று வருகின்றன. மூளைக் காய்ச்சலைத் தடுக்க கிராமங்களில் சுகாதாரப் பணிகள் துரிதப்படுத்தப்பட்டுள்ளன.

### போபால் மாநாடு

இம்மாதம்10,11,12,தேதிகளில் போபாலில் நிர்வாகத் துறை குறித்த கூட்டம் நடைபெறுகிறது இந்தக் கூட்டத்தில் தமிழகத்திலிருந்து நானும் [தேவராஜ்] நீலகிரி சேலம், மற்றும் சென்னை மாவட்ட ஆட்சித் தலைவர்களும் தமிழகத்திலிருந்து செல்கிறோம்.

இவ்வாறு கலெக்டர் தேவராஜ் கூறினார்.

# புரட்சித்தலைவருக்கு பிரதமர் ராஜீவ் பாராட்டு

புதுடெல்லி, டிச. 8 முதல்வர்புரட்சித்தலைவர் தலைமையிலுள்ள தமிழக அரசு வன வளங்களையும், வனச் செல்வங்களையும் திறமையாக பாதுகாத்து திட்டமிட்டு வளர்ப்பதை பிரதமர் ராஜீவ் காந்தி பாராட்டி உள்ளார்.

வனத்துறை அமைச்சர்களின் 22வது மாநாடுநேற்று புதுடெல்லியில் நடைபெற்றது அந்த மாநாட்டில் பிரதமர் ராஜீவ் பேசுகையில் தமிழக வனத்துறையின் பணிகளை இருமுறைபாராட்டினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் அமைந்துள்ள தமிழக அரசு தமிழகத்தில் வனவளங்களையும், வனச்செல்வங்களையும் திறமையாக பாதுகாப்பதையும் சீரிய முறையில் திட்டமிட்டு வளர்ப்பதையும் பிரதமர் ராஜீவ்காந்தி பெரிதும் பாராட்டினார்.

இந்தப்பணியை செவ்வனே தொடர வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்.

நேற்றையை மாநாட்டில் தமிழகவனத்துறை பொறுப்பை வகிக்கும் அமைச்சர் விவி சுவாமிநாதன் உரையாற்றினார்.

### மாபெரும் திட்டம்

இந்தியாவிலேயே முதன் முறையாக தமிழகத்தில் 9கோடியே50லட்சம்மரக் கன்றுகளை பள்ளிமாணவ-மாணவியரைக் கொண்டு ஒவ்வொரு ஆண்டும் நடும் மாபெரும் திட்டத்தை அமைச்சர் வி.வி. சுவாமிநாதன் விவரித்தார்.

இந்தியா சுதந்திரமடைந்து 40வது ஆண்டான இந்த ஆண்டில் 20இடங்களில்தலா 6லட்சம் செலவில் வனத்தோட்டங்கள் அமைக்கப்படுவதையும் புதிய நீர் நிர்வாகவனத்திட்டத்தையும் எடுத்துரைத்தார்.

வனக்குற்றங்கள் புரிபவர்களை குண்டர்கள் சட்டத்தின் கீழ் கைதுசெய்து காவலில் வைக்க சட்டதிருத்தம் கொண்டு வரப்பட்டுள்ளது வனத்துறையில் பணியாற்றுபவர்களுக்கு கம்பியில்லா தொலை பேசி தொடர்பு சாதனம்வழங்கப்பட்டுள்ளன என்றும் அவர்தெரிவித்தார்.

இட ஒதுக்கீடுகுறித்த பேச்சுவார்த்தையில் குறவர் இன பிரதிநிதிகள் பங்கேற்று முதல்வர் புரட்சித்தலைவருக்கு மணி மாலை அணிவித்தபோது எடுத்த படம்.

# பெல் நிறுவன தொழிற் சங்கம்: கழகம் வெற்றி

சென்னை. டிச. 8-ராணிப் பேட்டையிலுள்ள பி. எச். இ.எல் நிறுவன தொழிற்சாலை உணவகக் கமிட்டி தேர்தலில் கழக வேட்பாளர் வெற்றி பெற்றுள்ளார்.

ராணிப்பேட்டை பகுதியில் இயங்கி வரும் பி.எச்.இ.எல். தொழிற்சாலையின் உணவகக் கமிட்டி தேர்தலில் அண்ணா தொழிற்சங்கவேட்பாளர் எம். வி. குப்பன் மாபெரும் வெற்றி பெற்றார் அவரை எதிர்த்து நின்ற தி. மு. க, கம்யூனிஸ்ட் காங்கிரஸ் வேட்பாளர்களைவிட அதிகமான வாக்குகளைப் பெற்று வெற்றி பெற்றார்,

எம். வி. குப்பன் பேரவை பொதுச்செயலாளர் கோ. வேல்முருகனை ராணிப் பேட்டை பி.எச்.இ.எல். விருந்தினர் மாளிகையில் சந்தித்து ஆசி பெற்றார், அவ்வமயம் வட ஆற்காடு மாவட்ட அண்ணா தொழிற் சங்கச் செயலாளர் என்.ஜி. வேணுகோபால் ஜே. ஆர். சீனிவாசன்பட்டுக்கோட்டை அழகிரி போக்குவரத்துக் கழக அண்ணா தொழிற் சங்கப் பொதுச் செயலாளர் பி. ஆர். தேவேந்திரன், செயலாளர் ஜி. தவசீலன் செல்வராஜ் மற்றும் பி. எச். இ.எல்., அண்ணா தொழிற் சங்கச்செயலாளர் இரா. தமிழரசன் ஆகியோர் உடனிருந்தனர்,

## சென்னையில் பூமியை சுற்றிய அமெரிக்க பெண்

சென்னை, டிச. 8-அமெரிக்காவைச் சேர்ந்த பெண் மேரி கிளிவ், இவர் கடந்த 1985 ஆம் ஆண்டு அமெரிக்க ராக்கெட்டில் பூமியை சுற்றிப் பறந்தார். 7நாட்கள் பூமியை சுற்றி பல ஆராய்ச்சிகளை செய்து பூமிக்கு திரும்பினார். இவர் நேற்று சென்னை அடையாறில் உள்ள இந்திய தொழில் நுட்பக்கல்லூரியில் மாணவ-மாணவிகளுடன் கலந்துரையாடல் நடத்தினார்.

## வேளாண்மைத் துறை

அரசாணை (நிலை) எண். 2244

நாள்: 7-12-87

### அறிவிக்கை

கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காக கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு, அந்நிலங்களுக்கு வழங்கப்படவேண்டிய இழப்பீட்டுத் தொகை முழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது. ஆகவே, 1894-ம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் [மையச்சட்டம் 1-1894] 6-ம் பிரிவின்படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 0.30.0 ஹெக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது அரசு தாவாரயியல் பூங்கா கூடுதல் நுழைவு வாயிலுக்காக தேவைப்படுகின்றன என்று இதன்மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்களின் வரைபடங்கள் குன்னூர் கோட்டாட்சியர் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளது. அவற்றை அலுவலகப்பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்,

விவர அட்டவணை

மாவட்டம்: நீலகிரி வட்டம்: உதகமண்டலம்
கிராமம்: உதகமண்டலம் நகரம்

| நன்செய் (அ) புன்செய் என்ற நிலத்தின் விவரிப்பும் புல எண்ணும் | நிலச் சொந்தக்காரரின் (பட்டாதாரரின்) அல்லது அனுபவதாரரின் பெயர் | கையகப்படுத்த உள்ள பரப்பளவு | தரிசா அல்லது பயிரிடத் தக்கதா? (மரங்கள், கட்டிடங்கள், கிணறுகள்) ஆகியவற்றை குறிப்பிடவும் |
|---|---|---|---|
| புன்செய் நிலம் 4221-1ஏ 2 | 1, செயலாளர் ஹெப்ரான் பள்ளி, குன்னூர் 2. திரு. எம். கப்பினி கவுடர், 3. திருமதி. லலிதா 4. மைனர் [கே ராஜேஸ் பாதுகாவலர் தந்தை எம். கப்பினி கவுடர்) | 0. 08 12-16 ஏக்கர் [அ] 0.03.5 ஹெக்டேர் | பயிரிடத்தக்கது எண்கள் 3 மரங்கள் 7 |
| புன்செய் நிலம் 4221-1ஏ3 | 1. செயலாளர் ஹெப்ரான் பள்ளி- குன்னூர் 2. திரு. எம். சுப்பினி கவுடர் 3. திருமதி. லலிதா 4.மைனர் (கே. ராஜேஷ் பாதுகாவலர் தந்தை எம். கட்பினி கவுடர்) அனுபவதாரர்களின் பெயர் திருவாளர்கள் 1. ஸ்டீவார்டு2. நாருல்ஹ்தா 3. டி.சாயின் 4. எஸ். கே, அப்துல்ஹமீது 5. திருமதி சதிதேவி 6. திரு. டி. கிருஷ்ணன் 7.திரு.நைசர் 8. திரு. சேகர் 9. திருமதி ரீட் ாகோலி 10.திரு. லால்சந்த் 11.திரு.மனோகரன் | 0.54.9-16 அல்லது 0.22.0 ஹெக்டேர் | பயிரிடத்தக்கது கட்டிடம் -1 கிணறு -3 |
| புன்செய் நிலம் 4221-4பி | செயலாளர் ஹெப்ரான் பள்ளி, குன்னூர் | 0.11 ஏக்கர் அல்லது 0.04.5 ஹெக்டேர் 0.74.5/16 ஏக்கர் (அ) 0.30.0 ஹெக்டேர் | பயிரிடத்தக்கது |

ஸ்ரீரங்கன்
அரசு துணைச் செயலாளர்



## தலைமைக் கழக அறிவிப்பு

இதயதெய்வம்

# புரட்சித்தலைவர் பிறந்தநாள் விழா

மற்றும்

புரட்சித்தலைவர் தமிழகத்தின் முதல்வராக ஆட்சிப் பொறுப்பினை ஏற்று 10 ஆண்டுகள் நிறைவுபெற்று முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்த கழக அரசு பதினொன்றாம் ஆண்டில் வெற்றிகரமாக ஆட்சி நடத்தி வருவதையொட்டி பொற்கால ஆட்சி படைத்த புரட்சித்தலைவர் அரசு இது வரை ஆற்றிய அரும்பெரும் பணிகள் பற்றிய

## சாதனை விளக்க பொதுக்கூட்டங்கள்

### 23 12-1987 புதன்கிழமை

விருத்தாசலம் நகரம்
தென் ஆற்காடு மாவட்டம்

சிறப்புரை

திரு. ஜே. சி. டி. பிரபாகரன் பி.ஏ.,பி.எல். அவர்கள்
கழக எம்.ஜி.ஆர். இளைஞர் அணிச் செயலாளர்

திரு. வி. இராமநாதன் பி.ஏ.,பி.எல்., எம்.பி. அவர்கள்

திரு. வேங்கடவேணு அவர்கள்
தலைவர்-தென் ஆற்காடு மாவட்ட கூட்டுறவு பால் உற்பத்தியாளர்கள் ஒன்றியம்

திரு கே. ஆர். இராமலிங்கம் பி.ஏ.,பி.எல், அவர்கள்
தென் ஆற்காடு மாவட்ட எம்.ஜி.ஆர். இளைஞர் அணிச் செயலாளர்

திரு. ஜி. மூர்த்திராமன் பி.ஏ.,பி.எல். அவர்கள்
தென் ஆற்காடு மாவட்ட எம்.ஜி.ஆர். இளைஞர் அணித்தலைவர்

கூட்ட ஏற்பாடு

திரு ஆர் குஞ்சிதபாதம் அவர்கள்
விருத்தாசலம் நகர கழக பொறுப்பாளர்

திரு வி. இராஜேந்திரன் பி.ஏ.,பி.எல். அவர்கள்
விருத்தாசலம் நகர எம்.ஜி.ஆர். இளைஞர் அணிச் செயலாளர்

### 25-12-1987 வெள்ளிக்கிழமை

சென்னை
இராயபுரம் தொகுதி
13-வது வட்டம்

சிறப்புரை

மாண்புமிகு அமைச்சர்
திரு. கே, கே. எஸ். எஸ். ஆர். இராமச்சந்திரன் அவர்கள்

திரு. இ மதுசூதனன் அவர்கள்
சென்னை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றச் செயலாளர்

திருமதி மதுரை ஜி அன்னம்மாள் அவர்கள்

திரு. தா. வி. அன்புக்கண்ணன் அவர்கள்

திரு. ஆயிரம்விளக்கு டேவிட் அவர்கள்

கலை நிகழ்ச்சி

திரு. பல்லவன் சீனிவாசன் கலைக்குழுவினர்

கூட்ட எற்பாடு

திரு. வி. ஆறுமுகம் அவர்கள்
13-வது வட்ட கழகச்செயலாளா

திரு. சுகுமாரன் அவர்கள்
புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். மன்றம்

திரு. வி. மணி அவர்கள்
புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். மன்றம்

ஜெயலலிதா எம். பி.
கொள்கைபரப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக

சென்னை-14
8-12-1987

# கோர்பசேவ்-தாட்சர் சந்திப்பு

லண்டன், டிச. 8 அமெரிக்கா செல்லும் வழியில் ரஷ்ய அதிபர் கோர்பசேவ் இங்கிலாந்து பிரதமர் தாட்சரை சந்தித்து பேசினார், அமெரிக்கா செல்லும் வழியில் அவர் லண்டன் அருகே உள்ள ராயல் விமானப்படை தளத்தில் இறங்கினார். அப்போது இங்கிலாந்து பிரதமர் தாட்சர் அவரை கை குலுக்கி வரவேற்றார், பின்னர் அவர்கள் இருவரும் ஒன்றரை மணி நேரம் பேச்சுவார்த்தை நடத்தினர்.

# அமெரிக்க நாடாளுமன்றசிபாரிசை இந்தியா ஏற்பதற்கில்லை அமைச்சர் நட்வர்சிங் உறுதி

புதுடெல்லி, டிச. 8- அணுஆயுதம்பற்றி பாகிஸ்தானுடன் இந்தியாவையும் ஒப்பிட்டு நிறைவேற்றிய அமெரிக்க நாடாளுமன்ற சிபாரிசுகளை இந்தியா ஒருபோதும் ஏற்கமுடியாது என்று மத்திய அமைச்சர் நட்வர்சிங் நாடாளுமன்றத்தில் உறுதியுடன் கூறினார்.

அமெரிக்க நாடாளுமன்றத்தில் இந்தியாவுக்கு எதிரான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன.

அணு ஆயுத உற்பத்தில் பாகிஸ்தான் ஈடுபட்டு வருகிறது அணுசதியை ஆக்கப்பூர்வமான காரியங்களுக்கே இந்தியா பயன்படுத்துகிறது ஆனால் பாகிஸ்தான் அணு ஆயுதங்களை தயாரித்து வருகிறது இதை இந்தியா வன்மையாக கண்டித்து வருகிறது.

பாகிஸ்தான் அரசின் அணு ஆயுத உற்பத்திற்கு அமெரிக்கா மறைமுகமாக உதவி செய்து வருகிறது.

இந்த நிலையில் அமெரிக்க நாடாளுமன்றத்தில் இந்தியாவுக்கு எதிரான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. அணு ஆயுத உற்பத்தியில் பாகிஸ்தானுடன் இந்தியாவையும் சேர்த்து ஒப்பிட்டு தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது.

தவிர பாகிஸ்தானுக்கு மேன் மேலும் ஆயுதங்களை சப்ளைசெய்யவும்அமெரிக்கா முன் வந்துள்ளது.

பாகிஸ்தானுக்கு 402 கோடி டாலர் பெறுமானம் உள்ள ராணுவ தளவாடங்கள் மற்றும் பொருளாதார உதவி அளிக்க அமெரிக்கா நாடாளுமன்றம் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

நேற்று இந்திய நாடாளுமன்றத்தில் இது குறித்து ஜனதா உறுப்பினர் கேள்விகளை எழுப்பினார். அவையின் நடவடிக்கைகளை ஒத்தி வைத்துவிட்டு அமெரிக்க தீர்மானம் பற்றி விவாதிக்க வேண்டும் என்று கோரிக்கை விடுத்தார்.

இதற்குப்பதில் அளித்துப் பேசிய மத்திய வெளிவிவகாரத்துறை அமைச்சர் நட்வர்சிங் கூறியதாவது:-

அமெரிக்க நாடாளும்மன்ற சிபாரிசுகளை இந்தியா ஒருபோதும் ஏற்கமுடியாது.

பரஸ்பர நலன் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு தீர்மானங்கள் இருக்க வேண்டும்.

அப்படி இல்லாமல் இந்தியா-அமெரிக்கா ஆகிய நாடுகளுக்கும் இடையேயான உறவு பாதிக்கும் அளவில் எந்த வித தீர்மானமும் இருக்க முடியாது,

இருநாடுகளின் நட்புறவையும் ஆரோக்கியமான அரசியலையும் பாதிக்கும் தீர்மானங்கள் இந்திய அமெரிக்க உறவை இன்னும்மோசமாக்கிவிடும்.

ஆகவே அமெரிக்க நாடாளுமன்றதீர்மானங்கள் இந்தியாவுக்கு ஏற்புடையதாக இல்லை,

அமெரிக்க நாடாளுமன்ற சிபாரிசுகளை கண்டனம் செய்து இந்தியா தனது எதிர்ப்பை அமெரிக்காவுக்கு தெரிவித்துள்ளது.

இந்தியாவின் கவலையையும், கண்டனத்தையும் பிரதமர் ராஜீவ்காந்தி அமெரிக்க ஜனாதிபதி ரீகனுக்கு தெரிவித்துள்ளார்.

அமெரிக்க நாடாளுமன்ற நடவடிக்கைகளால் ஏற்படக்கூடிய விளைவுகளை குறித்தும் இந்தியாவில் உள்ள அமெரிக்க தூதரிடம் தெரிவித்துள்ளேன்,

இவ்வாறு மத்திய அமைச்சர் நட்வார்சிங் கூறினார்.

## கியூபா அதிபர் இந்தியா வருகிறார்

ஹவானா, டிச. 8- இந்தியாவுக்கு வரும்படி கியூபா நாட்டு அதிபர் காஸ்ட்ரோவுக்கு பிரதமர் ராஜீவ்காந்தி அழைப்பு விடுத்திருந்தார் அதன்படி அவர் இந்தியா வருகிறார்.

இந்த தகவலை வெளிநாட்டு இலாகா ராஜாங்க அமைச்சர் எட்வர்டு பலேரோ தெரிவித்து இருக்கிறார்.

கியூபா சென்ற அவர் அங்கு காஸ்ட்ரோவை சந்தித்த பிறகு இந்த தகவலை வெளியிட்டார்.

## ஆயுதப்படை காவலருக்கு ரூபாய் 500 பரிசு

சென்னை. டிச. 8- சென்னை பேசின்பிரிட்ஜ் அனல் மின் நிலையததில் பாதுகாப்புப்பணியில் உள்ள ஆயுதபடை காவலர் எழிலன் சிறப்பான பணிகளைப் பாராட்டி அவருக்கு ரூபாய் 500பரிசாகவழங்கப்பட்டது

தமிழ்நாடு மின்வாரிய கண்காணிப்புத்துறை போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் பி. துரை இந்த பரிசை வழங்கினார்

பேசின் பிரிட்ஜ் அனல் மின் நிலையத்தில் திருட முயன்ற கும்பலை தடுக்க முயன்ற போதுஎழிலன் கத்திகுத்துக்கு ஆளானார்.

## சேலம் உருக்காலை வேலைநிறுத்தம் வாபஸ்

சேலம், டிச. 8 சேலம் உருக்காலையில் கடந்த 20நாட்களாகநடந்து வந்த உள்ளிருப்ப வேலை நிறுத்தம் விலக்கிக்கொள்ளப் பட்டது.

சஸ்பெண்ட் செய்யப்பட்ட டிரைவர் ஒருவர் மீண்டும் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படவேண்டும் என்று கோரி தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்து வந்தனர்.

அந்த டிரைவரை வேலைக்குசேர்த்துக்கொள்ள உருக்காலை நிர்வாகம் முன்வந்ததைத் தொடர்ந்து தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் விலக்கிக்கொள்ளப் பட்டது.

## தங்கம் விலை குறைகிறது

சென்னை, டிச. 8- தங்கத்தின் விலை குறைய ஆரம்பித்துள்ளது.

தங்கத்தின் விலை கிடுகிடுவென்று உயர்ந்து ஒரு பவுன் ரூபாய் 3 ஆயிரத்தையும் தாண்டியது தெரிந்ததே

இப்போது அதன் விலை குறைய ஆரம்பித்துள்ளது.

தங்கம் ஒரு கிராம் விலை நேற்று ரூபாய் 325.50 ஆக குறைந்துள்ளது. ஒரு பவுன் நேற்று விலை ரூபாய் 2604 ஆக குறைந்து விட்டது

## மார்ச் 24 முதல் 12 ம் வகுப்பு தேர்வு

சென்னை, டிச. 8 பன்னிரண்டாம் பிளஸ்டூ வகுப்புக்கான தேர்வு மார்ச் 12 ம் தேதி தொடங்குகிறது. ஏப்ரல் 20 ம் தேதி தேர்வு முடிவு பெறுகிறது என்று அரசு செய்திக்குறிப்பு தெரிவித்துள்ளது.

## நாகாலாந்து புதிய சபாநாயகர்

கோஹிமா டிச, 8 நாகாலாந்து சட்டசபை புதிய சபாநாயகராக ஷோங் ஷென் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

இவர்ஒருமனதாக தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளார்.

## சமூக நலத்துறை

அரசாணை நிலை எண்2427

நாள் :27-11-87

### அறிவிக்கை

கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காக கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு அந்நிலங்களுக்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டுத் தொகை முழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது ஆகவே 1894-ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் மையச் சட்டம் 1-1894 6-ஆம் பிரிவின்படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்காணும் விவர அட்டவணையில் குறிப்பிட்டுள்ளதும் 0.41.0 எக்டேரைக்கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது ஓ.புதூர் மேலமங்கலம் கிராம ஆதிதிராவிடர்களின் வீட்டு மனைக்கு தேவைப்படுகின்றன என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்களின் வரைபடங்கள் சிவகங்கை ஆதிதிராவிடர் நல தனி வட்டாட்சியர் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன. அவற்றை அலுவலகப்பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்,

விவர அட்டவணை

மாவட்டம்: பசும்பொன் முத்துராமலிங்கம்
வட்டம்: சிவகங்கை கிராமம்: ஓ. புதூர்

| நன்செய் அல்லது புன்செய் என்ற நிலத்தின் விவரிப்பும் புல எண்ணும் | நிலச்சொந்தக் காரரின் (பட்டாதாரரின்) அல்லது அனுபவதாரரின் பெயர் | கையகப்படுத்த உள்ள பரப்பளவு (ஹெக்டேர்) | தரிசா அல்லது பயிரிடத் தக்கதா? (மரங்கள் கட்டிடங்கள், கிணறுகள் ஆகியவற்றை குறிப்பிடவும்) |
|---|---|---|---|
| புல எண் வகை 157-7பி புஞ்சை | வெள்ளையப்பன் மகன் தியாகராஜன் | 0.41,0 | பயிரிடத்தக்கது மரங்கள் கட்டிடங்கள் கிணறுகள் ஏதுமில்லை |

சோ. குமாரசுவாமி
அரசு துணைச் செயலாளர்

டி.ஐ.பி.ஆர். 178- பி, எம். 87- எம்.ஏ.சி.

# அகில இந்திய கைவினைப் பொருட்கள் வாரம்

டிசம்பர் 8-15, 1987

எல்லா அரசு எம்போரியங்களிலும் இந்த வார விற்பனையில் விசேஷ தள்ளுபடி உண்டு

அபிவிருத்திக் கமிஷனர் அலுவலகம் (கைவினைப் பொருட்கள்)

# தமிழ்நாடெங்கும் பரவலாக பலத்தமழை

சென்னை, டிச. 8- வங்கக்கடலில் உருவாகி யுள்ள புயல் சின்னத்தின் விளைவாக தமிழ்நாடெங் பலத்த மழை பெய்து வரு கிறது.

வங்கக் கடலில் சென் னைக்கு கிழக்கே குறைந்த காற்று அழுத்த மண்டலம் உருவாகியுள்ளது.

இதன் விளைவாக சென்னை உட்பட தமிழ் நாட்டின் கடலோர மாவட் டங்களில் நேற்று முதல் தொடர்ந்து பலத்த மழை பெய்து வருகிறது.

சென்னை நகரில் நேற்று மாலை முதல் தொடர்ந்து பலத்த மழை பெய்து வரு கிறது.

நகரின் தாழ்வான பகுதி களில் மழைத்தண்ணீர் வெள் ளம் போல் ஓடியது.

சாலைகளில் தேங்கி யுள்ள தண்ணீரை அகற்றும் பணியில் மாநக ராட்சி ஊழியர்கள் ஈடுபட் டுள்ளனர்.

மேலும் மழை பெய்யு மானால் தாழ்வான பகுதி களில் உள்ள மக்களை பத்திரமான இடத் திற்கு அழைத்து செல்லவும் ஏற்பாடுகள் செய்யப்பட் டுள்ளன.

சென்னை நகருக்கு குடிநீர் வழங்கும் ஏரிப்பகுதிகளிலும் மழை பெய்து வருகிறது.

நேற்று காலை வரை சென்னை நகருக்கு குடிநீர் சப்ளை செய்யும் ஏரி களில் மொத்தம் 105கோடி கன அடி நீர் உள்ளதுமேலும் தண்ணீர் வந்து கொண்டு இருக்கிறது.

## மாவட்டங்களில் நிலவரம்

தஞ்சை மாவட்டத்தில் நேற்று முதல் தொடர்ந்து பலத்தமழை பெய்து வருகிறது.

நாகை, திருவாரூர், மன் னார்குடி, திருத்துறைப் பூண்டி, மயிலாடுதுறை ஆகிய பகுதிகளில் பலத்த மழை பெய்து வருகிறது.

இதனால், வெண்ணாறு, காவிரி மற்றும் அதன் கிளை ஆறுகளிலும் மழைத்தண்ணீர் ஓடுகிறது.

வெள்ளத்தினால் தாழ்வான பகுதிகளில் உள்ளவர்கள் பாதிக்கப்பட்டால்அவர்களை பத்திரமான இடத்திற்கு அகற்றவும் அத்தியாவசியப் பொருட்கள் தடங்கல்இன்றி கிடைக்கவும் மாவட்டக் கலெக்டர் ராமுவும் மற்றும் அதிகாரிகளும் ஏற்பாடு செய் துள்ளனர்.

திருச்சி மற்றும் புதுக் கோட்டை மா வட் டங் களிலும் பரவலாக மழை பெய்து வருகிறது.

இதனால் இம்மாவட்டங் களில் பெரும் பாலான ஏரி கள் நிரம்பி விட்டன.

திருநெல்வேலி கட்டபொம்மன், அண்ணா, மதுரை, ராமநாத புரம், காமராஜ், பொன் முத்துராமலிங்கம் ஆகிய மாவட்டங்களிலும் பலத்த மழை பெய்துள்ளது.

## தாமிரபரணியில் வெள்ளம்

கடந்த சில வருடங்களாக இல்லாத வகையில் தாமிர பரணியில் வெள்ளம் பெருக் கெடுத்து ஓடுகிறது.

இதனால் தாமிரபரணி ஆற்றின் கரையோரங்களில் வசிப்பவர்கள் பத்திரமான இடங்களுக்கு அகற்றப்பட் டுள்ளனர்.

செங்கற்பட்டு தென்னாற் காடு, வடஆற்காடு ஆகிய மாவட்டங்களில் தொடர்ந்து மழை பெய்து வருகிறது. பெரும்பாலான ஏரிகள் நிரம்பிவிட்டன.

கன்னியாகுமரி மாவட்டத் தில்தொடர்ந்துபெய்தபலத்த மழையால் ஏரிகள் நிரம்பி வருகின்றன.

பேச்சிப்பாறை அணையில் நேற்று 45 அடி தண்ணீர் இருந்தது. இதன் மொத்த கொள்ளளவு 48 அடியாகும்.

அணைக்கு கூடுதல் தண் ணீர் வருவதால் உடைப்பு ஏற்படாமல் தடுக்க முன் னெச்சரிக்கை நடவடிக்கை கள் எடுக்கப்பட்டுள்ளன.

## எச்சரிக்கை கொடிகள்

சென்னை, கடலூர் நாகை. ஆகிய துறைமுகங்களில் எச்சரிக்கை கொடிகள் ஏற்றப்பட்டுள் ளன.

வெள்ளம்-மழையால் ஏற் படும் நிலைமையைசமாளிக்க முன்னெச்சரிக்கை நட வடிக்கைகளை எடுக்குமாறு எல்லா மாவட்டக் கலெக் டர்களும் அரசு உததரவிட் டுள்ளது.

## இராமநாதபுரம் மாவட்டத்தில் ரேசன் கார்டு வழங்கல்

சிவகங்கை டிச, 8- பசும்பொன் முத்துராம லிங்கம், இராமநாதபுரம் மாவட்டங்களில் குடும்ப அட்டை வழங்குவது சம்பந்த மாக இரு மாவட்ட ஆட்சித் தலைவர்களும் ஓர் அறி விப்பை வெளியிட்டுள்ளனர்,

அறிவிப்பின்படி பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பங் கள் 15-12-87 ம் தேதிக்குள் அந்தந்த நியாய விலைக் கடையில்திரும்பஒப்படைத்து விட்டு அதற்கு அத்தாட்சி யாக விற்பனையாளரிட மிருந்து ஒப்புதல் சீட்டு பெற்றுக் கொள்ளவேண்டும் 6-1-88ம் தேதி முதல் சம் பந்தப்பட்ட நியாய விலைக் கடையில் கார்டு ஒன்றுக்கு ரூபாய் 3-50 செலுத்தி புதிய குடும்ப கார்டு பெற்றுக் கொள்ளலாம்.

ரேஷன் கார்டு இதுவரை பெறப்படாதவர்களும் தொலைத்து விட்டவர்களும் புதியதாக தேவைப் படும் நபர்களும் 1-1-88 தேதிக்குப் பின்பு சம்பந்தப் பட்ட தாலுகா விநியோக அதிகாரிக்கு புதியதாகமனுச் செய்து பெற்றுக் கொள்ள லாம் இவ்வாறு இராமநாத புரம் பசும் பொன் முத்து ராமலிங்கம்மாவட்ட ஆட்சித் தலைவர்கள் கேட்டுக்கொள் கிறார்,கள்.

# நாகையில் எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை: மகாலிங்கம் வற்புறுத்தல்



புதுடெல்லி, டிச. 8- நாகையில் எண்ணெய் சுத்திகரிப்புஆலை அமைக்க வேண்டும் என கழக உறுப்பினர் மகாலிங்கம் மக்கள் சபையில் வலியுறுத் தினார்.

விலைவாசி உயர்வுகுறித்த விவாதத்தில் கலந்து கொண்டு பேசுகையில் கழக உறுப்பினர் எம். மகாலிங்கம் கூறியதாவது:

பொருளதாரத்தின் முன் னேற்றத்திற்கு ஆதரமாக இருப்பது நாட்டின் மொத்த உற்பத்தி ஆகும் விநியோக மும் தேவையும் சரியான விகி தாச் சாரத்தில் இருப்பின் நாட்டில் உள்ள பணபுழக் கத்தில் எந்த வித கேடும் இன்றி பொருளாதாரம் சிறந்து விளங்கும் என்பதை யாரும் மறுக்க முடியாது உற்பத்தி சார்ந்த பணபுழக்க பொருளாதாரமே வளர்ச் சிக்கு இன்றியமையாத கார ணியாகும் உற்பத்தி சரி யான அளவில் இல்லை யெனில் குறைந்த பொருட் களை அதிக பணம் கொடுத்து வாங்க முயற்சிக் கும் போது பண வீக்கம் ஏற்படுகிறது இந்த பண வீக் கத்தை கட்டுப்படுத்த அரசு பணத்தை மறுபடியும் உற் பத்தி செய்யுமானால் அது பணவீக்கத்தை மேன்மேலும் அதிகாரிக்கச் செய்யுமேதவிர பொருளதார வளர்ச்சிக்கு ஒருக்காலும் உதவாது.

ஜனவரி1984ல் நுகர்வோர் விலைஎண் 563 ஆகஇருந்தது படிப்படியாக உயர்ந்து ஆகஸ்ட் 1987ல் 736 எண்க ளாக பயங்கரமான வீக்கத்தை அடைந்துள்ளது வருந்தத்தக்க விஷயமே 1985-86ல் 6.5சதவிகிதமாக இருந்த வாழ்க்கைத்தர எண் 1986-87ல் 8.7சதவிகிதமாக உயர்ந்து நிற்கிறது மொத்த விலைப்பட்டியலின்படி 1985-86ல் 3.8 சதவிதமாக இருந்தபணவீக்கம்1986-87ல் 5.3 சதவிகிதமாக உயர்ந் துள்ளது ஒருருபாய் மதிப்பு 1960ம் ஆண்டு மதிப்பின்படி பார்ப்போமேயானால் 1986 ஜூலையில் 16.45 காசுகள் ஒரு வருடத்தில் அதாவது ஜூலை 1987ல் அதன் மதிப்பு 15.20காசு களாக மேலும் குறைந்துள் ளது.

## பண வீக்கம்

விலைவாசிகள் தொடர்ந்து உயர்ந்து கொண்டே வரு கின்றன அத்தியாவசிய பொருள்களான கோதுமை அரிசி சமையல் எண்ணை சர்க்கரை போன்ற பொருள் கள் விலை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது இந்த அள விலேயே சென்றால் பணவீக்கம் இரண்டு இலக்க எண்ணை எட்டிவிடுமோ என்ற பயம் ஏற்படுகிறது

நாகப்பட்டினம் தொகுதி யில்உள்ள வேதாரண்யத்தில் அதிகமாக உப்பு உற்பத்தி செய்யும் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். அவர்களால் தயாரிக்கப்படும் உப்பு வெளி யில் எடுத்துச் செல்லாமல் தேங்கிக்கிடக்கிறது.

இதனால் அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள் ஆகவே உப்பு உற்பத்தி செய்கின்ற தொழிலாளர் களின் கஷ்ட நிலையை போக்குவதற்கு அரசு நடவடிக்கை எடுக்கவேண் டும் அங்கு உற்பத்தி செய்கிற உப்பை ரயில்வே வேகன் மூலம் வெளியில் எடுத்துச் செல்லலாம் ஆனால் அங்கு ரயில் போக்குவரத்து சரி யானபடி இல்லை.

வேகன்கள் அடிக்கடி செல் வதில்லை இதை அரசு கவனிக்க வேண்டுமென கேட்டுக் கொள்கிறேன்,

அடுத்த படியாக ரோடு வழியாக லாரிகளில் அந்த உப்பை எடுத்து செல்லலாம் அதிக லாரிகள் சென்று வரு வதால் சாலையில் அடிக்கடி பழுது ஏற்படுகிறது அதனால் வேதாரண்யத்திலிருந்து தஞ் சாவூர் வரை செல்லும் இந்த ரோட்டை தேசிய மய மாக்க கேட்டுக் கொள் கிறேன்.

அதேபோல் என்னுடைய தொகுதியில் நாகப்பட்டினம் களப்பால் போன்ற இடங் களில் எண்ணெய், மற்றும் நிலவாயு எடுக்கப்பட்டு வரு கிறது இங்கு எடுக்கப்பட்டு வரும் சுத்தம்செய்யாத பெட ரோலை அதிக பொருள் செலவு செய்து சென்னையில் இருக்கும் எண்ணை சுத்தி கரிப்பு ஆலைக்கு எடுத்துச் செல்லப்படுகிறது இதனால் நாகப்பட்டினத்திலேயே எண் ணெய் சுத்திகரிப்பு தொழிற் சாலையை விரைவில் ஏற் படுத்த வேண்டும் இதற்காக அதிக பணத்தை ஒதுக்கி வேலையைத் துரிதப் படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இதனால் வேலை இல்லாமல் இருக்கும் பல ஆயிரக்கணக் கானவர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கும்.

தமிழ்நாடு அரசு விலை வாசிகளை கட்டுப்படுத்து வதற்காக பல்வேறு நட வடிக்கைகளை முன்பே எடுத்து வருகிறது குறிப்பாக கிராமங்கள் தோறும் நியாய விலை கடைகளை திறந்து அதன் மூலம் அத்தியாவசிய பண்டங்களை மக்களுக்கு விநியோகம் செய்து வருகி றது சத்துணவு திட்டங்களின் மூலம் பள்ளிக் குழந்தைகளுக் கும், முதியவர்களுக்கும் ஒரு நாளைக்கு ஒருவேளைஉணவு அளித்து வருகிறது இந்த திட் டத்திற்கு மத்திய அரசு உதவி அளிக்க வேண்டும் என கேட்டுக் கொள்கிறேன்.

மத்திய அரசு விலைவாசி ஏற்றத்திற்கு வறட்சியும் ஒருகாரணம் என கூறுகிறது. வறட்சி வெள்ளம், புயல் போன்ற இயற்கையின் சீற் றங்கள் நம்நாட்டில் வருடம் தவறாமல் ஏற்படுகின்ற எதிர் பாராத செலவு இவைகளை நீக்குவதற்கு அரசு நிரந்தர மான திட்டத்தை வகுக்க வேண்டும் குறிப்பாக தமிழ் நாட்டில் இவ்வாண்டுவறட்சி யின் காரணமாக விவசாயம் பாதிக்கப்பட்டு விவசாய உற் பத்தி பொருள்கள் கடுமை யாக குறைந்துவிட்டது.

இதற்கு முக்கிய காரணம் காவிரி நீர் பிரச்சினை. இந்த பிரச்சினையைத் தீர்க்க வேண்டும் என்று மாநில அரசு மத்திய அரசுக்கு பல முறை எடுத்துக் கூறி இருக் கிறது. நானே பலமுறை நாடாளுமன்றத்திலே கூறி இருக்கிறேன் இந்தியா மிகப் பெரிய நாடு இந்த நாட்டில் ஒரு பக்கம் வறட்சி ஒரு பக்கம் வெள்ளம் ஏற் படுகிறது. ஆகவே நாட்டில் ஓடுகின்ற நதிகளை தேசிய மயமாக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மகா நதி கோதாவரி கங்கை காவேரி போன்ற நதிகளை தேசிய மயமாக்குவதன்மூலம் இந்த நதிகளை ஒன்றாக இணைத்தால் வறட்சி வெள்ளம் போன்ற இந்த இரண்டு இயற்கை சீற்றங் களை நிச்சயமாக தவிர்க்க முடியும் இந்த இயற்கையின் சீற்றங்களுக்காக செலவாகும் தொகையை இந்த நதிகளை இணைப்பதற்கு செலவிட் டால் நிரந்தரமான ஒருதீர்வு கிடைக்கும் இதை மைய அரசு கவனிக்க வேண்டும் என்றுகேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு மகாலிங்கம் பேசினார்.

# விண்வெளியில் 300 நாட்கள்: ரஷ்ய விண்வெளி வீரரின் அற்புதசாதனை

மாஸ்கோ, டிச. 8- பூமியை வலம் வந்து கொண் டிருக்கும் 'மிர்' என்னும் சோவியத் விண்கலத்தைக் கடந்த 300 நாட்களுக்கு மேலாகச் செலுத்திக் கொண் டிருக்கிறார், யூரி ரோம னென்கோஎன்னும்சோவியத் விண்வெளி வீரர்.

43 வயதான இவர் நீண்ட விண்வெளிப்பயணம் சம்பந்த மான உலக சாதனைகளை யெல்லாம் மிஞ்சி விட்டார்.

டாக்டர்களின் முடிவுப்படி இவரது இருதய-இரத்த ஓட்ட மண்டலத்தின் அமைப்பு சகஜமாக உள்ளது ஆனால், எடையற்ற நிலை யில் இவரது கால் தசைகள் 15 சதவிகிதம் சுருங்கியுள் ளன; ஆனால் இந்தச் சுருக் கம், எதிர் பார்க்கப்பட்ட அளவுக்குள் தான்உள்ளது.

இவரது ஒட்டு மொத்த உடல் எடையில் மாற்ற மில்லை; பூமியில் இருந்ததை போன்றே விண்வெளியிலும் அது உள்ளது.

இவர் தினசரி இரண்டுமணி நேரம் உடற்பயிற்சி செய் கிறார்; ஒன்பது மணி நேரம் தூங்குகிறார்; இதனால் எடையற்ற நிலையின் விளைவுகள் அகற்றப்படுகின் றன என்று ரோமனென்கோ வுடன் 'மிர்' கலத்தில் இப் போது பயணம் செய்யும் எஞ்ஜினியர் அலெக்சாந்தர் அலெக்சாந்தரோவ் கூறு கிறார்.

'மிர்' கலத்தில் பயணம் செய்யும் சோவியத் விண் வெளி வீரர்கள் தமது பணி கள் மற்றும் உணவு நேரம் போக மீதியுள்ள நேரத்தில், பத்திரிகைகள் மற்றும் புத்த கங்கள் படிக்கின்றனர்; இன் னிசை கேட்கின்றனர்; விண் கலத்திலுள்ள துவாரத்தின் வழியாகப்பூமியை ஆராய்கின் றனர்.

செவ்வாய்கிரகத்தில் இறங் குவதற்கான தயாரிப்புகளை மனிதகுலம் மேற்கொள்ள வேண்டும் செவ்வாயை சுற்றி வர 30மாதங்கள் ஆகும் இதற்கான தயாரிப்புகளைச் சோவியத் யூனியன் மேற் கொண்டுள்ளஇவ்வேளையில் விண்வெளியில் 300நாட் களுக்கு மேல் பயணம்செய்து கொண்டிருக்கும்ரோமனென் கோவின் அற்புத சாதனை பொன் னெழுத்துக்களால் பொறிக்கத்தக்கதாகும்.

# ஆதிதிராவிட மக்களுக்கு 13ஆயிரம்ஏக்கர் நிலம்: அருணாசலம் தகவல்

சென்னை, டிச, 8- ஆதிதிராவிட மக்களுக்கு புரட்சித் தலைவர் ஆட்சி யில் 13 ஆயிரத்து 188 ஏக் கர் நிலத்தில் ஒரு லட்சத்து 86 ஆயிரம் வீட்டுமனைப் பட்டா வழங்கப்பட்டுள் ளது என்று அமைச்சர் அருணாசலம் தெரிவித் தார்.

டாக்டர் அம்பேத்கார் நினைவு நாளை யொட்டி ஆதிதிராவிட நலத்துறை அமைச்சர் அருணாசலம் தொலைக் காட்சியில் உரையாற்றினார்.

அவர் பேசுகையில் கூறிய தாவது:-

இந்திய அரசியலமைப்புச் சட்டம்எனும்எழில்கொண்ட மாளிகையை உருவாக்கிய இணையற்றசிற்பிகளில் மகத் தானவர் டாக்டர் மாமேதை அம்பேத்கார் ஆவார்.

ஆதிதிராவிடர் இனத்தில் தோன்றி சமூக நீதிக்காகப் போராடி அந்த இனத்திற்கு விடிவைத் தேடித்தந்த விடி வெள்ளி ஆவார்.

கெட்ட பொருள்களைத் தொடக்கூடாது குப்பைக் கூளம் துர்நாற்றப் பொருள் ஆகியவற்றில் நிச்சயமாகத் தீண்டாமை அனுஷ்டிக்கத் தான் வேண்டும்.

அக்கினி திராவகம் வெடி குண்டு,விஷம் சீறும் நாகம் கொட்டும்தேள் இன்னும் பலப்பல ஆபத்து தரு பவை அவைகளை தீண்டா திருக்க வேண்டும் நியாயம் ஆனால் பல கோடி மக்களை தாய் நாட்டவரை மூதாதையர் காலந்தொட்டு வாழ்ந்து வருபவரை தீண்ட மாட்டோம் என்றால் அது அர்த்த மற்றது விபரீத மானது விஷமத்தனமானது. தீண்டாமையால் என்ன நன்மை வந்தது என்றுயாரா லும் கூற முடியாது. ஆனால் ஆயிரமாயிரம் கேடுகள்விளை வதை அடுக்கடுக்காய் என் னால் சுட்டிக்காட்ட முடியும் என்று பேரறிஞர் அண்ணா குறிப்பிட்டார்.

தீண்டாமையில் தீ நாக்கு களால் சுடப்பட்டு சுடச்சுட ஒளிவரும் பொன்னைப்போல பிரகாசிக்கிறார் அண்ணல் அம்பேத்கார்.

தந்தை பெரியாரும் அண் ணல் அம்பேத்கார் மீது அளவற்ற அன்பும் பாசமும் கொண்டிருந்தார். முகம்மது அலிஜின்னாவை பார்க்க தந்தை பெரியார் பம்பாய் சென்றிருந்தபோது பெரியார் அம்பேத்காரை சந்தித்து அளவளாவி மகிழ்ந்தார் என்பது வரலாற்று நிகழ்ச்சியாகும். தாழ்த்தப்பட்டவர்கள் தலை நிமிர்ந்து நிற்க வேண்டுமா னால் அவர்கள் கல்வி பெறு வது கட்டாயத் தேவை என் பதை உணர்ந்து டாக்டர் அம்பேத்கார், 1928-ல் இரண்டு இலவச மாணவர் இல்லங்களைதாழ்த்தப்பட்ட ஆதி திராவிடர்களுக்காக மட்டும் தொடங்கி வைத்தார்.

## அரசு சலுகைகள்

அண்ணல் அம்பேத்காரின் கனவுகளை நிறை வேற்றும் வகையில் டாக்டர் புரட்சித்தலைவர் அரசுஆதிதிராவிடர்மாணவர் களுக்காக இலவச உணவு உடை வழங்கி மாவட்டந் தோறும் மாணவ மாணவி விடுதிகளைத் தொடங்கி வரு கிறது தமிழகத்தில்758 ஆதி திராவிடர் மாணவ மாணவி யர் விடுதிகள் இயங்கி வரு கின்றன. இவைகளில் 50 ஆயிரம் மாணவ,மாணவிகள் தங்கி இலவச உணவு உடை பெற்று கல்வி பயின்று வரு கிறார்கள்.

ஆதிதிராவிடர்களின் முன் னேற்றம் கல்வியில்தான் உள் ளது என்பதை உணர்ந்து, இந்த அரசு தனியாக அவர் களுக்காக 1,114 பள்ளிகளை ஏற்படுத்தி முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களின் சத்துணவும் பாடப்புத்தகமும் சீருடையும் தந்து ஆதி திராவிடர் மக்களை சீரடையச் செய்கிறது.

ஆதிதிராவிடர் கள் மற்றும் பழங்குடியின மக்கள் வாழவேண்டும் சுகா தாரமாக வாழவேண்டும் என்ற அடிப்படையில் தமி ழக அரசு அவர் களுக்கு இலவச மனைப்பட்டாக்கள் வழங்கி வருகிறது. அதுவும் பொன் மனச் செம்மல் புரட்சித் தலைவர் அவர்களின்ஆணைப் படி இதில் இப்பொழுது போர்க்கால நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

1977ல் இருந்து 1987 வரை 13,187 ஏக்கர் நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டு 1 லட்சத்து 86 ஆயிரம் மனைப் பட்டாக்கள் வழங்கப்பட் டுள்ளன என்பதை மிகுந்த பெருமையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அது மட்டுமல் லாமல் வழங்கப்பட்ட மனைப் பட்டாவில் இலவசமாக வீடு கள் தாட்கோ திட்டங்கள் மூலமும் கட்டிக் கொடுக்கப் படுகின்றன.

பாபாசாகேப்அம்பேத்கார் அவர்களின் வாழ்வும் தொண் டும் நமக்கெல்லாம் காலம் காலமாக வழிகாட்டும் என்று கூறி 1956 டிசம்பர் 6-ல் மறைந்த அண்ணல் அம்பேத்காரின் கனவை நனவாக்கும்புரட்சித் தலைவர் பொன்மனத்தார் ஆசின் சார்பிலும் அஞ்சலி செலுத்துகிறேன்.

இவ்வாறு அமைச்சர் அருணாசலம் கூறினார்.

# தமிழக வழக்குரைஞர் நல நிதி சட்டம்: அரசு உத்தரவு வெளியீடு

சென்னை, டிச .8- தமிழ்நாடு மாநில வழக் குரைஞர்களுக்கு ஓய்வு கால நன்மைகளை வழங்கு வதற்கான அரசு அறிவிப்பு வெளியிடப்பட்டுள்ளது.

தமிழகத்தில் உள்ள வழக் குரைஞர்களுக்கு ஓய்வு கால நன்மைகளை வழங்குவதற் காகவும் அதோடு சம்பந்தப் பட்ட அதற்கு இடை விளை வான நன்மைகளை வழக் கறிஞர்களுக்கு அளிப்பதற் கான சட்டம் சட்ட சபையில் நிறைவேற்றப்பட்டது.

சட்டசபையில் நிறை வேற்றப்பட்ட சட்டத்திற் கான அரசு உத்தரவு 7ந் தேதியன்று தமிழ் நாடு அரசு இதழில் வெளியிடப் பட்டுள்ளது.

# அம்பேத்கார் நினைவுநாள் தலைவர்கள் அஞ்சலி

சென்னை, டிச. 8 அம்பேத்காரின் 31வது நினைவு நாளையொட்டி சென்னையில் ஊர்வலம் நடத்தப்பட்டது அமைச்சர் அருணாசலம் அம்பேத்கார் சிலைக்கு மாலை அணி வித்து அஞ்சலி செலுத்தி னார்.

அம்பேத்காரின் 31-வது நினைவு நாளையொட்டி சென்னையில் அவரது சிலைக்கு பல்வேறு அமைப்பு கள் சார்பில் மாலை அணி விக்கப்பட்டது ஊர்வலங் களும் நடந்தன.

சென்னையில் உள்ள அம்பேத்கார் சிலைக்கு ஆதி திராவிட நலத்துறை அமைச் சர் அருணாசலம் மாலை அணிவித்து அஞ்சலிசெலுத்தி னார்.

சென்னைதுறைமுகம்அருகே உள்ளஅம்பேத்கார் சிலைக்கு சென்னை துறைமுக பொறுப்புக் கழக தலைவர் ஏ. பால்ராஜ் மாலை அணி வித்தார்.

## சையத்யூசுப்

துருக்கி, நாட்டு தூதர் சையது யூசுப் கப்பற் படை நிறுவன துணைத் தலைவர் கே.ஆர்.சி. ரெட்டி ஆகியோர் அம்பேத்கார் சிலைக்கு மாலை அணிவித் தனர்.

அம்பேத்கார் மக்கள் இயக் கத்தின் சார்பில் தமிழ்நாடு முழுவதும் அம்பேத்கார் நினைவு நாள் அனுஷ்டிக்கப் பட்டது.

அம்பேத்கார் மக்கள்இயக்கத் தலைவர் பாலசுந்தரம் சென்னை மாநகராட்சி நேரு விளையாட்டுஅரங்கம் எதிரே உள்ளஅம்பேத்கார் சிலைக்கு மாலை அணிவித்தார்.

இந்திய குடியரசு கட்சி யின் தமிழ் மாநில குழு வின் சார்பில் மாநில பொது செயலாளர் செ.குதமிழரசன் எம்.எல்.ஏ. மாலை அணிவித் தார்.

ராயப்பேட்டையில் 1000 பேருக்கு அன்னதானம் வழங்கப்பட்டது நகரெங்கும் பல்வேறு இடங்களில் அம்பேத்கார் படங்களுக்கு மாலை அணிவிக்கப்பட்டது.



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D M K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS-600029.

# கலை விருந்து

புதுமுகங்கள் திவ்யா, வினோத்ராஜ்
இவர்களுடன் சங்கீதா
படம்:- டான்ஸ் ராஜா டான்ஸ்

"வேதம் புதிது" பட தணிக்கை பிரச்சினை:

# மறைந்திருந்து சிலர் என்னை குத்துகிறார்கள் பாரதிராஜா வேதனை

இயக்குனர் பாரதிராஜா உருவாக்கியிருக்கும் படம் வேதம் புதிது இந்தப் படம் கடந்த மந்தம் 27ந் தேதியே வெளியிடுவதாக இருந்தது சென்சார் சர்டிபிகேட் கிடைக்காததால் வெளியிடப் படவில்லை.

ஒவ்வொரு படத்தையும் சென்சார்போர்டினர்பார்த்து சாடிபிகேட் வழங்கியபின்பே திரையிடப்படுகிறது. சில படங்களுக்கு சில காரணங்களுக்காக சென்சார் போர்டினர் அனுமதி மறுப்பதும், ஆட்சேபகர காட்சிகளோ, வசனங்களோ நீக்கப்பட்ட பின் அந்தப் படம் சென்சார் சர்டிபிகேட் பெற்று வெளியிடப்படுவதென்பதும் திரையுலகில் நடைபெறும் சாதாரணமான ஒன்று.

ஆனால் சென்னையிலுள்ள சென்சார் உறுப்பினர்கள் வேதம் புதிது படத்தை பார்த்து அதற்கு "யூ" சர்டிபிகேட் கொடுத்தபின் இந்தப்படத்திற்கு வழங்கப்படும் சென்சார் சர்டிபிகேட் மறுக்கப்பட்டதுடன் அது தொடர்பான பைல்கள் பம்பாய்க்கும் பின் டெல்லிக்கும் சென்றுள்ளன.

இதற்கு என்ன காரணம் என்று இதுவரை இந்தப் படத்தின் இயக்குனர்பாரதிராஜாவுக்கு சொல்லப்படவில்லையாம்.

காஞ்சி மடத்தைச்சேர்ந்தவர்கள் சிலரே இந்தப் படத்தை பாராட்டியதாகத் தெரிகிறது,

இயக்குனர் பாரதிராஜா இதுபற்றி கூறுகையில் எந்த மதத்தையும் இழிவுபடுத்தும் வகையில் நான் இதுவரை செயல்பட்டதில்லை இனியும் செயல்படமாட்டேன் நான் மனிதர்களை நேசிப்பவன். நான் திரையுலகில் நுழைந்தது முதல் இதுவரை கெட்டவை எதையும் போதிக்கவில்லை. எனது படங்களில் மிகப் பெரிய நீதியை சொல்லாவிடினும் அநீதியை சொல்லவில்லை என்று கூறினார்.

இந்தப் படத்தை அமைச்சர் ஆர்.எம்.வீ. இயக்குநர் பாலசந்தர் ஆனந்தவிகடன் ஆசிரியர் பாலசுப்பிரமணியம் இப்படி பலர் பார்த்து அருமையானபடம் என்று பாராட்டி இருக்கிறார்கள்.

கூறுகையில் தன்னையாரோ சிலர் மறைத்திருந்து குத்துவதாக கூறினார்.

தமிழ் திரைஉலகில் புதிய மறு மலர்ச்சியை தோற்றுவித்து சாமானியர்களும்இந்த துறையில் புகுந்து ஏற்றம் பெற வழி வகுத்தவர் பாரதிராஜா அந்த அற்புதக் கலைஞரை யாரோ சிலர் மறைந்திருந்து தாக்குவதுஅவர்களுக்கும் நல்லதல்லதமிழ்திரையுலகிற்கும் நல்லதல்ல என்றார் படஅதிபர் சித்ராலட்சுமணன், தமிழ்திரையுலகின் வளர்ச்சியை நலத்தைக் கருத்தில் கொண்டு இந்தப்படம் வெளிவர அனைவரும் முயற்சிக்க வேண்டும் என்பது நமது வேண்டுகோள்.

சென்சார் சர்டிபிகேட் தாமதம்குறித்து பாரதிராஜா

# ராமராஜனை மணமுடிக்க ரேவதி திடீர் முடிவு

அந்த கிராமத்தின் இளஞ்சிட்டு வள்ளிமயில் ஆடு மேய்க்கிறாள். அதே ஊரில் உள்ள செல்வராசு ஆடு மேய்த்து வருகிறான். வள்ளிமயிலுக்கும் செல்வராசுவுக்கும் காதல் மலர்ந்து விடுகிறது.

செல்வராசு "ஊதாரிப் பயல்" அவனுடன் பேச்சு கூட வச்சிக்காதே என்று கண்டிக்கிறாள் வள்ளிமயிலை வளர்த்து வரும் பாட்டி இதே நேரத்தில் வள்ளிமயிலை ஊருக்கு புதுசாய் வந்துஇருக்கும் கோடீஸ்வர இளைஞனுக்கு கட்டி வைக்க ஆசைபடுகிறாள். அந்தப் பாட்டி இவளது இந்த ஆசைக்கு தூபம்போட முன்னாள் பஞ்சாயத்து தலைவரையும் இன்னாள் பஞ்சாயத்து தலைவரையும் வளைத்து போடுகிறான் கோடீஸ்வர இளைஞன்.

ஆனால் வள்ளிமயிலுக்கோ செல்வராசை திருமணம் செய்து கொள்ள கொள்ளை ஆசை.

கோடீஸ்வரஇளைஞனுக்கு வள்ளிமயிலை திருமணம் செய்து வைக்க அவளது பாட்டி ஏற்பாடு செய்து விடுகிறாள் விசயத்தை வள்ளிமயில் செல்வராசுவிடம் சொல்கிறாள்.

அன்று நடு இரவு ஊருக்கு ஒதுக்குபுறத்தில் இருக்கும் கோவில்வள்ளிமயிலுக்காக காத்து கொண்டுஇருக்கிறான் செல்வராசு

வீட்டில் பாட்டி குறட்டை விட்டு தூங்கியதும் சத்தமில்லாமல் பெட்டியுடன் செல்வராசு இருக்கும் கோயிலுக்கு யாருக்கும்தெரியாமல் புறப்பட்டு போய் விடுகிறாள் வள்ளிமயில்.

வள்ளிமயிலும் செலவராசும் திருமணம் செய்து கொண்டார்களா? இல்லையா? என்பது 'கிராமத்து மின்னல்' படம் திரைக்கு வந்ததும் தெரியும்.

வள்ளிமயிலாக ரேவதியும், செல்வராசுவாக ராமராஜனும் கோடீஸ்வர இளைஞனாக ராஜாவும், ரேவதியின்பாட்டியாக எஸ். என். லட்சுமியும் முன்னாள் பஞ்சாயத்து தலைவராக கவுண்டமணியும் இந்நாள் பஞ்சாயத்து தலைவராக செந்தாமரையும் நடித்தார்கள்.

இப்படத்திற்கு செல்வகுமார் கதை, வசனம் எழுத இளையராஜா இசையமைக்கிறார்.

திரைக்கதை அமைத்து கே. ரங்கராஜ் இயக்க இளவரசன் ஒளிப்பதிவு செய்கிறார். இம்மாதம் வெளிவரப்போகும் இப்படத்தை ஜி. கே. வெங்கடேஷ் இளங்கோ ஆகியோர் தயாரித்து வருகிறார்கள்.

படப்பிடிப்பில் விபத்து:

# சரண்ராஜை கழுகுகொத்தியது

ஸ்ரீகற்பக விநாயகா பிலிம் சார்க்யூட்டின் கழுகு மலைக் கள்ளன் படத்தின் படப்பிடிப்பு சென்னை அருகே உள்ள கோவூரில் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

சரண்ராஜை தோளில் கழுகு ஒன்றை உட்காரவைத்துக்கொண்டு நடந்து வரும்படி சொன்னார் டைரக்டர் ராஜசேகர் சரண்ராஜும் அதே போல் கழுகைஉட்காரவைத்துக் கொண்டு நடந்து வந்து கொண்டிருந்தார். திடீரென்று சரண்ராஜின் தோளில் கழுகு வேகமாக கொத்தியது.சரண்ராஜ் உடனே அலறி விட்டார். குழுவினர் ஓடிச் சென்று சரண்ராஜை காப்பாற்றினர்.

டாக்டரிடம் சென்று மருந்துபோட்டு ஊசி செலுத்திய பின்மீண்டும் சரண்ராஜ் நடிக்கவந்தார்.

வேகமாக வளர்ந்து வரும் கழுகு மலைக் கள்ளனில் சேகர் லலிதா குமாரி நாசர் டிஸ்கோ சாந்தி இன்னும் பலர் நடிக்க ரங்கா ஒளிப்பதிவு செய்கிறார்.

சந்திரபோஸ் இசையமைக்க கதை திரைக்கதை வசனம் எழுதி ராஜசேகர் இயக்கி வருகிறார்.

## சங்கிலிகருப்பன்

அவள் மெல்ல சிரித்தாள் படத்தை தயாரித்த நங்கவள்ளி எஸ். பன்னீர்செல்வம் தயாரிக்கும் இரண்டாவது படம் கவிதா சினி ஆர்ட்ஸ் "சங்கிலி கருப்பன்" இது மிகுந்த பொருட் செலவில் தயாராகும் சின்மாஸ் கோப் படம்.

மிகுந்த பொருட் செலவில் தயாரிக்கும் இந்த சினிமாஸ் கோப் படத்தின் கதை, திரைக்கதை,வசனம், எழுதி இயக்குபவர் எம். என்.ஜெய் சுந்தர்.

# கார்த்திக் கழுத்தில் பல்லவி கட்டியதாலி

கார்த்திக் இரட்டை பின்னல் அணிந்து காதில் சிமிக்கி தொங்க, பாவடை, தாவணியுடன் அச்சம நாணம், மடம் பயிர்ப்பு ஆகிய பெண்களுக்கே உரிய குணங்களுடன் அன்ன நடை நடந்துபூமியை பார்த்தபடி வந்தார்.

அப்போது மங்கல ஓசை முழங்கிக் கொண்டிருந்தது அரும்பு மீசைக்கார வாலிபன் டிப்டாப்புடன் வந்தான் இல்லை, இல்லை வந்தார் ஆணாக மாறிய பல்லவி பெண்ணாக மாறிய கார்த்திக் கழுத்தில் தாலி கட்டினார்.

மாதா கோவிலில் பிரார்த்தனை முடித்து வீட்டிற்கு வந்த பல்லவியிடம் பிறந்த நாள் பரிசாக டிஸ்கோ காஸட் ஒன்றைகொடுத்தார்.

அதை ஆசையுடன் பாடலுடன் கேட்ட பல்லவி மேற்படி தான் ஆண்மகனாகவும் காதலன் பெண்ணாகவும் மாறியதாக கனவு கண்டார். இந்த சுவாரஸியமான காட்சி ஸ்ரீசக்ராமூவீஸ் "ஆராய்ச்சி மணி" படத்துக்காக படமாக்கப்பட்டது.

இப்படத்தில் ராணுவ வீரராக பிரபுநடித்து வருகிறார் அவருக்கு ஜோடியாக ரேகா நடிக்கிறார். விஸ்வம் கண்பார்வையற்றவராக நடிக்கிறார்.எம்.எல்.ஏ.வாக யுவராஜா நடிக்கிறார்.

கதைஇசையை பாக்யராஜ் கவனிக்கிறார். ஒளிப்பதிவை இளவரசன் கவனிக்கிறார். இப் படத்தை டி.குமார் தயாரிக்கிறார்.

வசனத்தைஆர்.பி.விஸ்வம் எழுதுகிறார்.

ஜி.எம்.குமார்இப்படத்தை டைரக்ட் செய்து வருகிறார்.

உன்னுள் நான்-என்னுள் நீ
கொஞ்சி மகிழும் ஜோடிகள்
செந்தில்-சரளா

# மூங்கில் கோட்டை: லண்டனில் பாடல் பதிவுடன் ஆரம்பம்

ஆங்கிலப் படங்கள் உருவாவது போன்று மூங்கில் கோட்டை ஓர் தொடர் சித்திரம், ஊமை விழிகள் படத்தின் இரண்டாவது பாகம்தான் மூங்கில் கோட்டை ஆபாவாணனின் ஊமை விழிகள் படத்தின் கடைசி கட்டத்தில் வாழ்ந்த கதாபாத்திரங்கள் அனைத்தும் இப்படத்தில் இடம் பெறுவதோடு, அதே நடிகர்கள் அதே பாத்திரங்களில் நடிக்கிறார்கள் ஊமைவிழிகள் படத்தில் டி. எஸ். பி. தீனதயாளாக தோன்றிய விஜயகாந்த் பதவி உயர்வு பெற்ற எஸ்.பி.தீனதயாளாகநடிக்கிறார், மற்றும் கார்த்திக், சசிகலா, ஸ்ரீவித்யா ஜெய்சங்கர், அருண் பாண்டியன், கோகிலா ஆகியோர் நடிக்கிறார்கள். நாசர் புதிய பாத்திரத்தில் நடிக்கிறார். சினிமாஸ்கோப்பில் உருவாக்கப்படுவதால் படத்தின்சிறப்பிற்காக படத்தின் வெளி புறக்காட்சிகள் காஷ்மீர், நேபாளம், கோவா, கேரளா ஆகியஇடங்களில்படமாகும். 1000க்கும் மேற்பட்டதுணை நடிகர்கள் இப்படத்தில்பங்கு கொள்கின்றனர்.

இப்படத்தில் 9 பாடல்கள் மொத்தம் இடம் பெறுகின்றன.

9 டிராக் ஸ்டீரியோபோனிக் ஒலிப்பதிவு முறையில் பாடல்களை பதிவு செய்ய திட்டமிட்டிருக்கிறார், ஆபாவாணன்,

அதனால் பாடல்கள் லண்டனில் பதிவாகும்.

திரைச்சிற்பிஸ்தாபனத்தின் கீழ் ஆபாவாணன் தயாரிக்கும் இப்படத்தின் கதை வசனம் பாடல்கள் இணை இசை ஆகிய முக்கியபொறுப்புக்களை ஆபாவாணனே கவனிக்கிறார்.

திரைப்படக் கல்லூரியில் பயின்ற பட்டதாரி ராஜாரவி இப்படத்தின் இயக்குனராக பணி புரிகிறார்.

ஒளிப்பதிவு செல்வகுமார், எடிட்டிங் அசோக் மூவருக்கும் இது முதல் படமாகும்.

# பூந்தோட்ட காவல்காரனுக்கு முதுமலையில் பிரம்மாண்ட அரங்கு

விஜய்காந்த், ராதிகா இணைந்து நடிக்கும் புதிய படம் ஒன்றை டி. சிவா, ஆர். சுந்தரராஜ், ஐ. ரகமதுல்லா. ஆகியோர் ஆரம்பித்திருக்கும் தமிழ்அன்னை சினி கிரியேஷன் சார்பில் உருவாக்குகின்றனா. பாடல் பதிவுடன் ஆரம்பிக்கப்பட்ட இப்படத்தை செந்தில்நாதன் என்ற இளைஞர் இயக்குகிறார். இவர் பிரபல இயக்குனர் ஜம்புவின் புதல்வர், இவரது முதல் படம் இது. லியாகத் அலிகான் திரைக்கதை வசனம் எழுதும் இப்படத்திற்கு பாடல்களை கங்கை அமரனும், இசையை இளையராஜாவும் கவனிக்கின்றனர். ராஜராஜன் ஒளிப்பதிவு செய்யும் இப்படத்தின் எடிட்டிங்கை ஐஜி. ஜெயசந்திரன் கவனிக்கிறார். நடன அமைப்பு சுந்தரம் சண்டைக் காட்சிகள் அமைப்பு சூப்பர் சுப்பராயன் இப்படத்தில் ஆனந்த் செந்தில் தியாகு டக்ளஸ் ராமு கோகிலா காந்திமதி ஒய் விஜயா ஆகியோருடன்எம் என் நம்பியார் முக்கிய பாத்திரத்தில் நடிக்கிறார் புதுமுகம் லிவிங்ஸ்டன் வில்லனாக அறிமுகம் ஆகிறார.

மிகுந்த பொருட் செலவில் உருவாக்க திட்டமிட்டிருக்கும் இப்படத்தின் வெளிப்புறக் காட்சி முதுமலை-ஊட்டியில்படமாகும்டிசம்பர் 11 முதல் ஜனவரி 23 வரை தொடர்ந்து 40 நாட்கள் படப்பிடிப்பு நடைபெற்று ஒரே தொடர்கட்டத்தில் படப்பிடிப்பு முடிவடையும் முதுமலைக்காட்டில் 2 லட்ச ரூபாய் செலவில் ஆர்ட் டைரக்டர்கள் ஜே.கே.ஜிகே மிகப் பிரம்மாண்ட செட் ஒன்று நிர்மாணித்துக் கொண்டிருக்கிறார்கள் தச்சர் மற்றும் பணியாளர் 220-க்கும் மேற்பட்டவர்கள் இரவு பகலாக செட் நிர்மாணப் பணியில் ஈடுபட்டு வருகின்றனர் விஜயகாந்த் இதுவரை ஏற்று நடிக்காத புதிய பாத்திரத்தில் நடிக்கிறார்.

# கிராமத்து சிங்கம்

எவர்கிரீன் பட நிறுவனத்தின் கிராமத்துசிங்கம்'' படப்பிடிப்பு முடிவடைந்தது.

பெரும் பொருட் செலவில் தயாரிக்கப்பட்ட இப்படத்தில் அர்ஜுன், பூர்ணிமா ராவ், செந்தில், எஸ்.எஸ். சந்திரன், குள்ளமணி, ஓமக்குச்சி, ஒய்.விஜயா, புதுமுகங்கள் ராஜா, சந்திரிகா, மற்றும் பலர் நடித்துள்ளர்.

இப்படத்தில் டைரக்டர் இராம நாராயணனிடம் அசோசியேட் டைரக்டராக பணிபுரிந்த சி.பி, கோலப்பன் முக்கிய வேடத்தில் நடித்துள்ளார்.

இப்படத்தின் இசையை கே,வி. மகாதேவன் அமைத்துள்ளார்.

இப்படத்தை கே.ராமகிருஷ்ணன் டைரக்ட் செய்துள்ளார்.

# நாடகத்துறை: இந்தியா- ரஷ்யா கூட்டு முயற்சி

சோவியத் நாட்டில் உள்ள ஒரே ஊமை நாடக மன்றமான மாஸ்கோ ஊமைநாடக மன்றத்தினர், இந்தியாவில் நாடக நிகழ்ச்சிகளை நடத்த இருக்கிறார்கள். இந்தநாடக மன்றத்துக்கு கெத்ரியஸ் மகேவிசியஸ் இயக்குநராக இருக்கிறார்.

பேச்சுக்களே இல்லாமல் நாடகக் காட்சிகள் அமைக்கப்படுகின்றன அபிநயங்கள் மூலமமாவே கருத்துக்கள் வெளிப்படுத்தப்படுகின்றன நாடகம்.கவிதைபாலே நிழல் நாடகம் போன்ற அனைத்துக் கலை வடிவங்களையும் இந்த ஊமை நாடகம் உள்ளடக்கியதாக இருக்கிறது.

இந்த நாடக மன்றம் 1974 ல் ஆரம்பிக்கப்பட்டது முதல் நாடகமாக சிலி நாட்டின் பெருங் கவிஞர் பாப்லோ நெருடாவின் 'கான்டாட்டா' நடத்தப்பட்டது சிலியில் ராணுவ ஆட்சியை எதிர்த்து சுதந்திரத்துக்காகப் போராடி வரும் சிலி நாட்டு போராளிகளுக்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில் அந்த நாடகம் நடத்தப்பட்டது.

இந்தியாவில் நடத்துவதற்கென்றே மகாபாரதத்தில் இருந்து 'கிருஷ்ணனைப் பற்றிய நினைவுகள்' என்னும் புதிய நாடகம் ஒன்றை இந்தக் குழுவினர் தயாரித்து இருக்கிறார்கள். உண்மையைக் காண்பதற்கான மனிதனின் தேடல்களையே இந்த நாடகக்குழு தனது நாடகங்களில் மையக் கருவாக அமைத்துக் கொள்கிறது.

"கிருஷ்ணனைப் பற்றிய நினைவுகள்" என்னும் இந்த நாடகத்தை எழுதி, இயக்கி இருப்பவா சோவியத் நாட்டில், நெசின் இசைக் கல்லூரியில் பயிலும் இந்திய மாணவி அனாமிகா ஹக்சர் என்பது குறிப்பிடத்தக்கது.

மாஸ்கோ ஊமை நாடகத்துக்கும் இந்திய நாடகத்துக்கும் இடையில்இசை.நடனம்.அபிநயங்கள் போன்ற பலபொதுவான அம்சங்கள் இருக்கின்றன.மகாபாரதத்தின்தத்துவ உள்ளடக்கத்தையே, "கிருஷ்ணனைப்ப பற்றிய நினைவுகள்" என்னும் நாடகத்தில் இந்தக்குழுவினர் எடுத்துரைக்க முயன்றுள்ளனர். இந்த நாடகத்தில் அம்ஜத் அலிகான், சவுராசிரா ஆகியோரின் சாஸ்திரிய இந்தியஇசையும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த நாடகத்துக்கு டெல்லியில் உள்ளதேசியநாடகக் கல்லூரியைச் சேர்ந்தவர்களும இசையமைத்துக் கொடுத்திருக்கிறார்கள்,

மேடை நாடகத்துறையில் இந்தியசோவியத் ஒத்துழைப்புக்கு இந்த "கிருஷ்ணனைப் பற்றிய நினைவுகள்', நாடகம் ஓர் எடுத்துக்காட்டாக இருக்கும் சோவியத் இந்திய கலாச்சார உறவுகளில் இது ஒரு புதிய ஏட்டை புரட்டும்.

ரஞ்சித்குமார்-பல்லவி
படம்:- உங்களில் ஒருவன்